உ

சிவமயம்.

சங்கரவிநாயகர் துணை.

# சூரைமாநகர்க்
# கடம்பவனச் சங்கரவிநாயகர்பதிகம்.

இது,

சொக்கலிங்கம்புத்தூர்
ஸ்ரீமாணிக்கவாசகவித்தியாசாலைத்
தலைமைத்தமிழாசிரியர், ப்ரும்மஸ்ரீ
ரே. இராமமூர்த்தி ஐயரவர்களால்
இயற்றப்பெற்று,

கூடியூர்
சு. மு. சோ. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்களால்
மதுரைத்தமிழ்ச்சங்க அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பெற்றது.

...னவருஷ பங்குனிமீ
1926

உ

# முகவுரை.

சூரைமாநகர், இது மங்கலப்பாண்டிவளநாட்டகத்து, கிழக்கே வீரவனத்தையும், தெற்கே சோமினூரையும், மேற்கே பயூரகிரியையும், வடக்கே திருபேய்யத்தையும் ஐவைந்து நாழிகைவழித்தூரத்தில் எல்லைகளாகப்பெற்று இவற்றினடுவண் விளங்குவதாயும், செங்கண்மால், சூரன், சங்கப்புலவர், பொன்ஞனவிசாலயதேவன், சூரியன் இவர்கள் வழிபடப் பேறுதந்தருளியதாயும் உள்ள புராதன சிவஸ்தலம்.

இத்தலவிநாயகமூர்த்திகள் இருவர். (க) காட்சிவிநாயகர் (உ) சங்கரவிநாயகர். காட்சிவிநாயகர் மேலைத் திருமதிலின்பக்கத்தும், சங்கரவிநாயகர் தென்றிசையில் அண்மையிலுள்ள கடம்பவனத்தின்கண்ணும் எழுந்தருளி விளங்குகின்றனர்.

### காட்சிவிநாயகர்துதி.

பூமேவு செந்தமிழுச் சகரமொழி
　　யிரண்டுளொன்று போன்றோர் தூணி
ஞமேவு வகையுதித்த மடங்கல்பிறப்
　　பிடத்திழியு நாடி நாண

வோமேவு குஞ்சாமு மப்பிடியுங்
கலப்பவுதித் துலக மெல்லாந்

தாமேவு விதம்பொலியுங் காட்சிமால்
களிற்றினிரு சாணஞ் சார்வாம். (க)

குலமறை யெடுத்துக் கூறுங்
குறிகுணங் கடந்து மேலோர்

வலமுறக் கருத லாய
மானமுங் கடந்தி யாரு

நிலவுகாற் பயனு மெய்த
நிறைந்தொளிர் மதியக் கீற்றுக்

கலமுடிக் கருணைக் காட்சிக்
களிற்றினைக் கருத்துள் வைப்பாம். (உ)

சங்கரவிநாயகர்துதி.

மருவுபெரும் போகமெலா மொருங்கடைவான்
பூசைபுரி மாண்பு வாய்த்தோர்

திருவுதர மளவிற்றே சுருங்கிற்றே
வென்றுவிழி செலுத்தா தாற்றப்

பொருவுதவிர் பேருதாத் தொடும்பொலிந்து
நாற்பயனும் புவனத் தியார்க்கும்
வெருவுதவிர்த் தருளுமொரு சங்கரமால்
களிற்றினடி மேவி வாழ்வாம்.

இவை, கவிஞர்பெருமானும் திருவாவடுதுறை ஆதீனத்து மஹாவித்துவானுமாகிய திரிசிரபுரம் ஸ்ரீமீனாக்ஷிசுந்தரம் பிள்ளையவர்கள்; வடமொழி முதனூலிலிருந்து பெயர்த்துத் தமிழில் இனியசெய்யுள் நடையாக இயற்றிய சூரைமாநகர்ப்புராணத்துள்ளவை. நிற்க.

சொக்கலிங்கம்புத்தூர் ஸ்ரீமாந், சு. மு. சொ. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கள் சங்கரகணேசப் பெருமானுக்குப் பதிகம் பாடுவிக்கவேண்டுமென்னும் பேரவாவுடன் என்னைப்பாடும்படிசொல்ல இவ்வருமையானபணிக்குப்போதிய அறிவாற்றல்பெறாத யானும் "ஏழையடியாரவர்கள் யாவை சொனசொன்மகிழுமீசன்" என்ற தமிழ்வேதத்தை மனத்துட் கொண்டு அதற்கிசைந்தேன். பதிகம்பாடிப் பூர்த்தி பெற்றபின்னர், மகிபாலன்பட்டி, பண்டிதமணி, திருவாளர், மு. கதிரேசச்செட்டியாரவர்கள் தலைமைவகித்த இந்நகர் ஸ்ரீமணிவாசகர் மாணவர்சங்கத்தின் முதல் வருஷ பூர்த்தியில் (குரோதனஞு புரட்டாசிமீ ௩௨) அரங்கேற்றப்பெற்றது.

ஒன்றுக்கும் பற்றாச் சிறியேனுக்குப் பாடம்பணியாகிய பாக்கியத்தைத் தந்த பெருந்தகையன்பாகிய ஸ்ரீமாந், சு. மு. சொ. சொக்கலிங்கஞ்செட்டியாரவர்கட்கும், வெளிற்றுரைகளாற் றொடுத்த பாடற்கும் மனமுவந்து சிறப்புப்பாயிரந்தந்த, பண்டிதமணி, திருவாளர், மு. கதிரேசச்செட்டியாரவர்கட்கும் பெரிதும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேன்.

இங்ஙனம்,

ரெ. இராமமூர்த்தி,

மதுரைத் தமிழ்ச்சங்க மாணவன்.

உ

# சிறப்புப்பாயிரம்.

---

மகிபாலன்பட்டி ஸ்ரீமாந்:

பண்டிதமணி, மு. கதிரேசச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

தண்மலர்ப் பொழில்சூழ் சூரைச்
சங்கர கணேசன் பாத
வொண்மலர்க் கணியாம் வண்ண
முறுதமிழ்ப் பதிக மொன்றை
உண்மைசா லன்புத் தீந்தே
னெழுகநன் றுரைத்தான் கல்வி
வண்மைகூ ரிராம மூர்த்தி
யெனும்பெயர் மதிவல் லோனே.

---

## அவையடக்கம்.

தங்கியவன் பாற்பதிகந் தண்கடம் பாடவிவாழ்
சங்கர கணேசற்குச் சாற்றினேன்—றுங்கமிகு
செந்தமிழ் வல்லோர் திகழவைக்கட் சேடன்முன்
வந்துநாங் கூழாடு மாறு.

உ

சிவமயம்.

சங்கரவிநாயகர் துணை.

# சூளாமாநகர்க்

# கடம்பவனச் சங்கர விநாயகர் பதிகம்.

## காப்பு.

திங்க ளணிந்த சிவபெருமான் றந்தருளுஞ்
சங்கரவிநாயகற்குச் சார்பதிகம்—பொங்குசுவை
மேவ வுரைக்க விரைந்தவ் விநாயகனே
நாவிற் கருள்க நயந்து.

## நூல்.

திருமகள் கடாக்ஷமும் வாணிதிரு நோக்கமுஞ்
செகமெலா மெச்சு புகழுந்
தேகசுக முஞ்சிந்தை மேவுமகிழ் வும்பெரியர்
சேர்க்கையுந் திண்மை நிலையும்
மருவிநினை நாடோறு மேத்திவழி படுதலும்
மறவாத நினைவு மீந்து
வழிவழி யுனக்கடிமை செய்யுமிப் பாக்கியம்
வழங்கியருள் செய்தல் வேண்டுந்

தருவென நினைத்தவவை வழிபடு நலோர்கொளத்
தருகரமோ ரைந்து தாங்குஞ்
சுத்தான தெய்வமே வள்ளியை மணக்கவரு
சண்முகற் குதவு வோனே
தருணமெது வெனவமரர் முதலோர்கள் பணிவுறச்
சார்ந்துகுழ மிப்ப மில்வுறுஞ்
சந்தமித குரையிற் றண்கடம் பாடவிச்
சங்கர கணேச மணியே. (க)

பத்தியாய் நின்பாத பதுமத்தின் மேவவொரு
பச்சிலையை யிடுவ ரேனும்
பாராளு மரிமையும் பலவகை வளங்களும்
பரிந்தவர்க் கருளு தலினுன்
மெத்தநின் பாலன்பு மேவுவார் பிறரெலாம்
வேட்டவை யுவந்து பெறுவார்
மெய்ம்மையா மிதுகண்டு நின்பாத சேவையினை
வேட்டிலா வினைய னேற்குச்
சித்தமா சொருவவரு பத்தியா லுன்றனைத்
தென்கடம் பாட விதனிற்
சேர்ந்துதொழ நீயருள வேண்டுமிது வேண்டினேன்
திருவருள் சாந்த நுளவாய்

தத்தியே யலைதாள மெற்றியயல் வீசுறுஞ்
சங்கதீர்த் தக்க ரையில்வாழ்
சர்வபரி பூரணத யாபரா சூரைவரு
சங்கர கணேச மணியே. (உ)

மடமேவு நெஞ்சோடு முறவாடி யதுசெலும்
வழியெலா மோடி வாடி
மதிமோச மாயினே னுயினே னுன்சரணம்
வாழ்த்திஞ விருமை நலனும்
படிமீதி லெவருக்கு நின்பெருங் கருணையாற்
பாவிக்கு மஃது ணர்ந்தேன்
பட்டதுயர் போதுமினி யெட்டுணையு மெய்திற்
பரிக்கமுடி யாது காப்பாய்
புடைமேவி மணநாறு முயர்சோலை யிரவியின்
புரவிக்கு நறுநிழல் தருஉம்
பொற்புடைய வளநகர மாகுமிச் சூரையிற்
பூங்கடம் பாட விதனிற்
றடவா ரணத்தின்வடி வொடுநிலவி யுன்னுமவர்
தமராகி வாழு முதல்வா
சத்தியா லெத்தேவர் தம்மினும் மேலான
சங்கர கணேச மணியே. (ங)

முன்னுளி னினது திரு நன்னுமை நவிலாது
முண்டகத் தாடொ ழாது
முறையுறச் சிந்தியா தேழையே னுறுதுயர
மொழியொணு தன்பு பெரிதா
மன்னையா கியுமப்ப னுகியு மனைத்துலகு
மாட்சிபுரி நின்முன் வந்தேன்
அல்லலறு காவண்ண நல்லருள்செய் வாயுன்ற
னருளினுக் கீடேது முலகுகாண்
பொன்னுன நல்விசா லயதேவன் வழிபடப்
பொங்கருள் சுரந்து புவியிற்
போற்றுவார் வினைமாற்றி யேற்றமே நல்கும்
புராந்தக னுகந்த மதலாய்
தன்னேரி லாப்பெருங் கருணைபுரி தெய்வமே
தமிழ்மண மருத சூரைத்
தண்கடம் பாடவிபி லண்டர்தொழ மேவிடுஞ்
சங்கர கணேச மணியே. (௪)

ஈயாத லோபிகளை யீவரென் றெண்ணியவ
ரில்லங்க டோறு நண்ணி
யின்னிசைப் பாக்கள்பற் பலநன்கு சொலவே
யெழுத்துவா சுனையு மில்லார்

நீயாவ னுனையிவண் விடுத்தவனு மேவனென
நெட்டுயிர்ப் பெய்து நோக்கி
நில்லாம லேகுவாய் செல்லாது பாட்டென்ன
நிந்திப்பர் துணையி லேன்காண்
சேயான ஞானபண் டிதனுக்கு முன்வந்த
திகழறிவு வடிவ மான
தெய்வமே சிறியனேன் சொல்பனுவ லுட்கொண்டு
திருவினொடு மருவ வைப்பாய்
சாயாது செல்விருந் தோம்பிமேல் வருவிருந்
தாளர்களை நோக்கி நிற்குந்
தக்கோர்கள் வாழ்கூரை சேர்கடம் பாடவிச்
சங்கர கணேச மணியே. (௫)

சிங்கார மானமட வார்மையல் மீறியே
செல்கதிச் செலவொ ழிந்தேன்
தீயரொடு கூடியே சாதுசங் கத்தினைச்
சீயென வெறுத்தி கழ்ந்தே
னெங்காகி லும்பிற ரெனக்குநிக ரில்லையென்
றிறுமாந் திசைத்தி ருந்தே
னில்லாரை யெள்ளுவேன் பொல்லாத சொல்லுவே
னிம்பியள வேனு மீயேன்

பொங்காழி சூழ்வைய மீதறிவி லேனையும்
பூரித்த நின்க ருணையாற்
போதநிலை மேவிடச் செய்துகாப் பாயுனது
பொற்பதம் போற்று கின்றேன்
றங்காத லோடுபல ரும்வாழ்வு சார்ந்திடச்
சாருவார் தம்மை யாளத்
தாழையொடு பூகமலி சோலைமிகு சூரைவரு
சங்கர கணேச மணியே. (சு)

தந்தைதாய் மனைமக்க ளுறவினர்க ளிவரெலாந்
தருணத்தி லுதவி செய்து
சங்கடந் தனைநீப்ப ரென்றுநா னெண்ணியது
தனிநீத்த மேற முயல்வோன்
வெந்திடாப் பசுமண்ணி னியல்குதிரை துணையாக
மேவுமது போன்ற ததனால்
வேறினிப் புகலாகி நிற்பவர்க ளெவரென
விசாரித் தலைந்த காலை
யெந்தைநீ யல்லாம லெவருமிலை யென்றுணர்ந்
திணையிலாத் துணைய தாகி
யின்பெலாந் தந்தஞ்ச லென்றுள நின்சரண
மேத்தினேன் காத்த ருளுவாய்

சந்தமுறு வேதவொலி கீதவொலி மாருத
தலமெனப் பெற்ற சூரைச்
சங்கர னுகந்தமணி யேகடம் பாடவிச்
சங்கர கணேச மணியே. (எ)

என்றுநீ யன்றுநா னென்றபடி யேழையே
னெய்துபசு போத மதனு
லெடுத்தசன் மங்கோடி கோடியா மளவில்லை
யெய்த்தன னெய்த்த னன்கா
ணென்றநினை யுணர்கின்ற பதிபோத நீயருள்செய்
துதவினு லல்ல துணரே
னுழல்கின்ற வூசல்போற் பல்பிறவி யெய்துவே
னுதனைமிக வஞ்சு கின்றே
னன்றுன பல்கோடி யடியருட னெளியனையு
நாட்டிடிற் கேட்க வல்லார்
நாதனே யெவருமிலை யாதலாற் றிருவுள
நயந்தினிக் காத்தல் கடனே
தன்று டொழும்புலவ ருக்கால வாய்க்காட்சி
தந்தசிவ னின்ற சூரைத்
தண்கடம் பாடவியி லன்பருக் கின்புதவு
சங்கர கணேச மணியே. (அ)

சக்கரச் செல்வமது பெற்றுலகை யாளினுந்
தக்கவ ரணைந்த போது

தலையா லிறைஞ்சிமிக வுபசார நன்மொழிகள்
சாற்றியவ ரன்பு பெறவுந்

திக்கெலாம் புகழ்கின்ற வதிரூப மங்கையர்கள்
சேர்விருப் போடு வரினுந்

திகழ்கின்ற வறிவுசிதை யாமலன் னையரெனச்
சிந்தையிற் கொள்ளும் விதமும்

நக்கனு யன்றுதா ருகவனத் துறைமுனிவர்
நாடுமனை தோறு மேகி

நங்கைமார் தருபிச்சை வாங்குமவி காரிதரு
நன்மைந்த நீய ருளுவாய்

சக்கரா யுதனயன் பல்கோடி வானவர்கள்
சந்ததமும் வந்து போற்றத்

தண்ணளி சுரக்கின்ற வைங்கரா குணாகரு
சங்கர கணேச மணியே. (௬)

கன்மத்தி னல்வந்த சன்மத்தை யுற்றபின்
கடலலைகள் போல மேன்மேற்

கவலைபெரி தாகயா னுள்ளந் தளர்ந்தனன்
கவலற்க வென்று சொல்லி

யின்பத்தை யூட்டுவா ரெவரையுங் காண்கிலே
னேழைக் கிரங்குமிறைவா
வின்புதவு கருணையா லிருவினை யகற்றியுன
தெழில்பெறு பதந்த ருகுவாய்
பொன்பெற்ற மேனியுஞ் செஞ்சடா டவியுமேற்
பொங்குகால் வீசு செவியும்
போற்றுமுக் கண்களும் நால்வாயு மைங்கரப்
பொற்புமிவை தாங்கி யுலகிற்
சன்மித்த சீவகோ டிகளெலாம் பணிசெய்து
தணிவிலா வின்பு பெறவே
தண்கடம் பாடவியை மேவியொளிர் சூரைவரு
சங்கர கணேச மணியே. (ம)



---

## வாழ்த்து.

மங்குலுறை மாமுகில் வழாதுமழை பெய்க
வெங்குமுல கத்துயிர்க ளின்பநல மார்க
பொங்கிய கடம்பவன மன்பர்தொழு புத்தேட்
சங்கர கணேசனருள் வாழிய தழைத்தே.

சுபம்! சுபம்!! சுபம்!!!